வெளியீடு எண் 332.

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# திருநல்லூர்த் தலவரலாறு

இது
திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம்
இருபத்துமூன்றாவது குருமகாசந்நிதானம்
ஸ்ரீ-லஸ்ரீ சிவப்பிரகாசதேசிக பரமாசாரிய சுவாமிகள்
அருளாணையின்வண்ணம்
வெளியிடப்பெற்றது.

திருவாவடுதுறை ஆதீனம்
1984



## குருமரபு வாழ்த்து

கயிலாய பரம்பரையில் சிவஞான
போதநெறி காட்டும் வெண்ணெய்
பயில்வாய்மை மெய்கண்டான் சந்ததிக்கோர்
மெய்ஞ்ஞான பாநு வாகிக்
குயிலாரும் பொழில்திருவா வடுதுறைவாழ்
குருநமச்சி வாய தேவன்
சயிலாதி மரபுடையோன் திருமரபு
நீடூழி தழைக மாதோ.

ஸ்ரீ மாதவச் சிவஞானயோகிகள்.

உ

சிவமயம்

# பதிப்புரை

'வண்ணம்ஐந்து உடையாய் போற்றி
வானவர் தலைவா போற்றி
பெண்ணொரு பாகா போற்றி
பேரருட் செல்வா போற்றி
எண்ணுதற்கு அரியாய் போற்றி
எமக்கெளி வந்தாய் போற்றி
அண்ணலே போற்றி நல்லூர்
அமலனே போற்றி போற்றி.'

— தலபுராணம்.

திருக்கயிலையில் சிவபெருமான் திரு ஓலக்கம் கொண்டருளுகின்றார். தரிசிப்பதற்காகத் தேவர்கள் கூட்டங்கூட்டமாகச் செல்கிறார்கள்; வீழ்ந்து பணிகிறார்கள்; பணியும்போது தேவர்களின் மணிமுடிகள் திருவடியில் தோய்கின்றன. அதனால் முடியிலுள்ள மலரும்பருவத்து அரும்புகளெல்லாம் மலர்கின்றன. மலர்களிலுள்ள தேன் சிந்துகிறது. அதனால் திருவடி நனைகிறது; ஈரமாகிறது. அத்தகைய சிறப்புடையது பெருமான் தமக்குச் சூட்டிய திருவடி என நமக்குக் காட்டுகிறார் திருநாவுக்கரசர்.

வெம்மையான நீற்றறையையே குளிர்ந்த பொய்கையாகக் கொண்ட நாவுக்கரசரைப் பெருமான் 'நல்லூருக்கு வருக' என்றழைத்து, 'உன்னுடைய நினைப்பதனை முடிக்கின்றோம்' என்று திருவடியை அவர்தம் தலைமீது சூட்டுகிறார். சூட்டப்பெற்ற நாவரசர் நலம்பெற்றேன் என்று பாடுகிறார். அப்போது அவரடைந்த மெய்ப்பாட்டுணர்வைப் 'புனிதர் அருள் நினைந்து உருகி விழுந்து எழுந்து நிறைந்து மலர்ந்து, ஒழியாத தனம் பெரிதும்பெற்ற வறியோன்போல் மனம் தழைத்தார்' என்று முறையாகச் சொல்லிக் காட்டுகிறார் சேக்கிழார்.

திருக்கயிலாயத்தைப்போலவே திருநல்லூரிலும் இறைவன் விருப்போடு அமர்ந்துள்ளார் என்பதை 'வடபால் கயிலையும் தென்பால் நல்லூரும் தம் வாழ்பதியே' என்ற நாவரசரின் நற்றமிழ்ப்பகுதி தெரிவிக்கும்.

இங்ஙனம் திருநாவுக்கரசருக்குத் திருவடி சூட்டியதும், அமர்நீதிநாயனார் திருமடம் அமைத்து அடியார்களை வழிபட்டதுமாகிய சிறப்புடையது திருநல்லூர். மூர்த்தி தலம் தீர்த்தங்களின் பெருமையை அறிவிக்கும் இத் தலபுராணம் தமிழிலுள்ளது; ஆயிரத்துப் பதினாறு பாடல்களை உடையது. அதனைச் சுருக்கமாக உரைநடையில் எழுதி வெளியிடின் வழிபடும் அன்பர்களுக்குப் பயனுடையதாக இருக்கும் என்பது ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களின் திருவுளக்கருத்து. அவர்கள் அருளாணையை ஏற்று அன்பர் வித்துவான் திரு. மா. சிவகுருநாதன் அவர்கள் இவ்வுரைநடை நூலை எழுதியுள்ளார்.

தலத்தைப்பற்றிய வரலாற்றுச் செய்திகளும், தலத்திற்கு உரிய திருமுறைப் பாடல்கள் திருப்புகழ்ப் பாடல்கள் முதலியனவும் ஒருசேர இதில் தொகுத்துத் தரப்பெற்றுள்ளன.

'நாளை மாசிமகமாயிற்றே! நான் எப்படி கடலுக்குச் சென்று நீராடமுடியும்' என்று கவன்ற குந்திதேவிக்குப் பெருமான் ஏழுகடல்களையும் நல்லூருக்கு வரச்செய்து அருள் பாலித்தார் என்பது புராணவரலாறு. அத்தகைய மாசிமகத் திருவிழா (17—2—84) அன்று இந்நூல் வெளிவருகிறது.

மேன்மைகொள் சைவநீதி உலகமெல்லாம் விளங்க அறப்பணிகள் பலவற்றை ஆற்றிவருகின்ற ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்களின் பெருங்கருணைத் திறத்தை அன்பர்கள் போற்றி, தலப்பெருமை அறிந்து, திருப்பதிகங்களை ஓதி என்றும் இன்பம் பெறுவார்களாக.

திருவாவடுதுறை.
15—2—84.

வித்துவான், மு. ஆறுமுக தேசிகர்,
ஆதீன நூலகர்.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# முன்னுரை

' வண்ண மலரானும் வையம் அளந்தானும்
நண்ண லரியானை நல்லூர்ப் பெருமானைத்
தண்ண மலர்தூவித் தாள்கள் தொழுதேத்த
எண்ணும் அடியார்கட்கு இல்லை இடுக்கணே. '

— திருஞானசம்பந்தர்.

மண்ணினிற் பிறந்தார் பெறும்பயன் மதிசூடும் அண்ணலாரை வழிபடுதல். இவ்வழிபாட்டிற்கு எண்ணிறந்த ஆலயங்கள் நம்நாட்டில் உள்ளன. இவற்றுள் தேவாரப்பாடல்பெற்ற திருத்தலங்கள் 274. அவைகளுள் காவிரியின் வடகரையில் அறுபத்து மூன்றும், தென்கரையில் நூற்றிருபத்தேழும் ஆகச் சோழநாட்டுத்தலங்கள் 190 ஆகும். தென்கரைத் தலங்களுள் திருநல்லூர் இருபதாவதாக எண்ணப்பட்டுள்ளது.

இத்திருநல்லூர்த்திருக்கோயில், எல்லாவகைச் சிறப்புகளையும் பெற்று, சைவமும் தமிழும் மற்றும் சமுதாயமும் தழைத்தினிதோங்கப் பல்வகை அறங்களையும் நாளும் செய்துவரும் திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனத்திற்குச் சொந்தமானதாகும்.

இக்கோயிலுக்கு வடமொழியிலும் தென்தமிழிலும் விரிவான புராணங்கள் உள்ளன. எனினும் காலத்திற்கேற்ப மக்கள் யாவரும் படித்துணர்ந்து வழிபட்டு உய்யும்வண்ணம் திருவுள்ளங்கொண்ட திருவாவடுதுறை ஆதீனத்து இருபத்து மூன்றுவது குருமகாசந்நிதானமாக எழுந்தருளியிருக்கின்ற

ஸ்ரீலஸ்ரீ சிவப்பிரகாசதேசிக பரமாசாரிய சுவாமிகள் அவர்கள் முதன்முதலாக 21—7—83 குருவாரத்தன்று திருநல்லூர்க் கோயில் தரிசனத்திற்கு எழுந்தருளியபோது இத்தலவரலாற்றை முறையாக எழுத அடியேனுக்கு ஆணையிட்டருளினார்கள்.

ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தின் திருவருள் முன்னின்று வழிகாட்ட, அடியேன் இதற்குமுன் எழுதிவைத்திருந்த குறிப்புக்களுடன் எழுதலானேன். சிவநேயச் செல்வர்கள் படித்துப் பயன்பெற இச்சீரிய பணியை ஒன்றுக்கும் பற்றாத எளியேனுக்கு அளித்து ஆரருள்புரிந்த ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் திருவடிக் கமலங்களை வந்தித்து வணங்குகின்றேன்.

*இங்ஙனம்,*

சுந்தரப்பெருமாள்கோயில்,
15—2—84.

*வித்துவான்,*
**மா. சிவகுருநாத பிள்ளை,**
*ஒய்வுபெற்ற தமிழாசிரியர்.*

உ

சிவமயம்

# தலப்பெயர் குறித்த திருப்பாடல்கள்

மனவஞ்சர் மற்றோட முன்மாத ராரும்
மதிகூர் திருக்கூடலில் ஆலவாயும்
இனவஞ் 'சொலிலா இடைமா மருதும்
இரும்பைப்பதி மாகாளம் வெற்றியூரும்
கனமஞ் சினமால் விடையான் விரும்பும்
கருகாவூர் நல்லூர் பெரும்புலியூர்
தனமென் சொலிற்றஞ்ச மென்றே நினைமின்
தவமாம் மலமாயின தானறுமே.

— திருஞானசம்பந்தர்.

நதியாருஞ் சடையானை நல்லூ ரானை
நள்ளாற்றின் மேயானை நல்லத் தானை
மதுவாரும் பொழில்புடைசூழ் வாய்மூ ரானை
மறைக்காடு மேயானை ஆக்கூ ரானை
நெதியாளன் தோழனை நீடு ரானை
நெய்த்தான மேயானை ஆரூர் என்னும்
பதியானைப் பள்ளியின்முக் கூட லானைப்
பயிலாதே பாழேநான் உழன்ற வாறே.

நறையூரில் சித்தீச் சரம்நன் ளாறு
நாரையூர் நாகேச்சரம் நல்லூர் நல்ல
துறையூர் சோற்றுத்துறை சூல மங்கை
தோணிபுரம் துருத்தி சோமீச் சரம்
உறையூர் கடலொற்றி யூருற் றத்தூர்
ஓமாம் புலியூரோர் ஏட கத்தும்
கறையூர் கருப்பறியல் கன்றாப் பூரும்
கயிலாய நாதனையே காண லாமே.

பிறையூருஞ் சடைமுடியெம் பெருமா னூரர்
பெரும்பற்றப் புலியூரும் பேரா வூரும்
நறையூரும் நல்லூரும் நல்லாற் றூரும்
நாலூரும் சேற்றூரும் நாரை யூரும்
உறையூரும் ஒத்தூரும் ஊற்றத் தூரும்
அளப்பூர்ஓ மாம்புலியூர் ஒற்றி யூரும்
துறையூரும் துவையூரும் தோழூர் தானுந்
துடையூரும் தொழஇடர்கள் தொடரா அன்றே.

— திருநாவுக்கரசர்.

## திருத்தொண்டர் சதகம்

அருள்பெறும் பொன்னிநா டிலகுபழை யாறையூ
ரதன்வணிகர் ஆடை மாடை
அளவில்எண் நிதியுடைய அமர்நீதி யாரடியர்
அன்புவைத்(து) உடைகோ வணம்
தருவர்திரு நல்லூர் விழாவின்மடம் உறைபொழுது
தக்கசிறு முனிவர் பொற்கைத்
தண்டில்இரு கோவணம் கொண்டுசென் றிடஅன்பர்
தாம்அமுது கொள்க என்ன
உருவநீர் தோய்வம்என்(று) ஒருகோ வணம்தந்(து)
ஒழித்துவந்(து) ஈரம் மாற்(ற)எம்
முடைகோ வணந்தனைத் தாஎனக் காணஇலை
வேறொன்று தருவல் எனநேர்
மருவுநிறை தாஎனத் தொண்டர்நிறை கோலுறமுன்
வந்(து)அடிமை கொண்ட கயிலை
வாசனே! இராஜலிங் கேசனே! சிவதைநகர்
மாணிக்க மலைநாதனே.

— மலைக்கொழுந்துநாவலர்.

உ

சிவமயம்

# திருநல்லூர்த் தலவரலாறு

தெய்வம் மணக்கும் திருக்கோயில்களைப் பார்க்குமிட மெங்கும் நீக்கமற நிறையப்பெற்று விளங்கும் நம் நாட்டில் மூர்த்தி, தலம், தீர்த்தம் ஆகிய சிறப்புக்களுடன் தேவாரப் பாடலையும்பெற்று விழாப்பொலிவுடன்விளங்கும் திருநல்லூர்த் தலப்பெருமை மிகச்சிறப்புடையதாகும்.

இருப்பிடம் : அன்னம்பாலிக்கும் தில்லைச் சிற்றம்பலத்தையும், பொன்னம்பாலிக்கும் பொன்னிநதியாகிய காவிரியையும், சிவலிங்கத்திருமேனிகள் யாவற்றிலும் பெருமையாகப் போற்றப்படும் ஸ்ரீ மகாலிங்கப்பெருமான் வீற்றிருக்கும் திருவிடைமருதூரையும் மற்றும் பலப்பல திருத்தலங்களையும் தன்னகத்தே கொண்டது சோழநாடு. இத்தகைய சோழ நாட்டில் காவிரிக்குத் தென்கரையில் சிவராசதானியாக விளங்கும் திருவாவடுதுறை ஆதீனத்திற்குச் சொந்தமான இத் திருநல்லூர் இருக்கிறது.

அதாவது தஞ்சாவூர் மாவட்டத்தில் தஞ்சாவூர் – கும்பகோணப் பெருவழியில் பாபநாசத்திற்குக் கிழக்கில் உள்ள வாழைப்பழக்கடையில் இருந்து அரைகல் தூரத்தில் இருக்கிறது. சுந்தரப்பெருமாள் கோயில் புகைவண்டி நிலையத்திற்குத் தெற்கில் ஒன்றரைகல் தூரத்தில் இருக்கிறது.

சுற்றியுள்ள தலங்கள் : திருஆவூர்ப்பசுபதீச்சரம், அவளிவணல்லூர், திருக்கருகாவூர், திருப்பாலைத்துறை, திருவலஞ்சுழி, சுவாமிமலை, திருச்சத்திமுற்றம், பட்டீச்சரம் ஆகிய திருத்தலங்கள் இத்திருநல்லூரைச் சுற்றியுள்ளன.

தலமும் கோயிலும் : அன்னம் வைகும் வயல்பழனத்திடை விளங்கும் இத்திருநல்லூரின் நான்கு திருவீதிகளுக்கிடையில் முன்பக்கம் சப்தசாகரம் என்னும் தீர்த்தம் விளங்க, தூரத்தே இருந்து கண்டார் கவினுறக்காணும்வண்ணம் ஒருவிண்ணிழி

விமானத்துடன் இக்கோயில் விளங்குகிறது. கடுவாய் எனப் பெயர்பெற்ற காவிரியின் கிளைநதியாகிய குடமுருட்டியாறு இத்தலத்தை ஒட்டி வடபால் ஓடுகிறது.

கோயில் அமைப்பு: ஒரு குன்றவில்லியாராகிய சிவபிரானுக்குக் குன்றமன்ன பெருங்கோயில்களை எழுப்பிச் சைவங் காத்த பெருமை சோழமன்னர்களையே சாரும். இத்தகு வளவர்குடியில் தோன்றிய மன்னன் கோச்செங்கட்சோழன் திருவுடைமன்னன் என்ற பெயரோடுமன்றி நாயன்மார்களில் ஒருவனாக விளங்கி, எண்டோள் ஈசற்கு எழில்மாடம் எழுபது செய்து உலகம் புரந்தவன். இவன் அமைத்த கோயில்கள்* அனைத்தும் மாடக்கோயில்கள், பெருங்கோயில்கள் என்று பெயர்பெறும். இதன் அமைப்பு யானை ஒன்று திருக்கோயிலினுட் புகாதவாறு பல படிக்கட்டுகளுடன், நேர்முக வாயிலின்றிப் பிறிதொரு பக்கமாக வாயில் அமைந்திருக்கும்.

இத்தகு அமைப்பில் அமைந்த இக்கோயில் தென்பக்கம் இருபத்தைந்து படிக்கட்டுகளுடன் சுவாமி அம்பிகை சந்நிதிகளை உயரத்தே கொண்டுள்ளது. ஞானசம்பந்தர் தாம் பாடிய இவ்வூர்ப் பதிகத்தில் இறைவனை நோக்கி ''மலை மல்கு கோயிலே கோயிலாக மகிழ்ந்திரே'' என்கின்றார்.

இரண்டு திருச்சுற்றுக்களையுடைய இக்கோயில், சுமார் 316 அடி நீளமும், 228 அகலமும் உடையது. முன்னர் சுமார் 100 அடி உயரமுள்ள ஒரு இராசகோபுரமும், மேற்றிசையில் சுமார் 50 அடி உயரமுள்ள ஒரு கோபுரமும் உள்ளன. ஆனால் இவ்விரு கோபுரத்தினும் பெருமான் வீற்றிருக்கும் கருவறையின் விமானமே, மிக்க தூரத்தே நின்றார் கண்டு தரிசிக்கும் வண்ணம் மிக்க உயரமாக அமைந்துள்ளது.

முன்கோபுரவாயிலினுள் நுழைந்ததும் பிள்ளையார், கொடிமரம், பலிபீடம், நந்தி முதலியனவும், தென்கிழக்கில் மடைப்பள்ளியும், தெற்கில் இக்கோயிலில் யாவருக்கும் கண்கண்ட தெய்வமாய் விளங்கும் அஷ்டபுஜ மகாகாளியும், வடகிழக்கில் யாகசாலை மண்டபம், விசுவநாதர் சந்நிதி, உற்சவமண்டபம் இவை யாவும் உள்ளன. இன்னும் இத்திருச்சுற்றின் தென் கிழக்கில் அமர்நீதிநாயனார் வரலாற்றுத் தொடர்புடைய ஒரு

---

* சிக்கல் கீழ்வேளூர், தேலூர், வலிவலம், குடவாயில், ஆலூர்.

நாற்கால் மண்டபம் உள்ளது. ஆனிமாதப் பூரத்தன்று அமர்நீதியார் தம் உடைமைகள் யாவற்றையும் பெருமானது கோவணத்திற்கு எடையாகத் துலையிடப்படும் காட்சி இந் நாற்கால் மண்டபத்தில் நிகழும்.

இதனை அடுத்த உட்பிரகாரத்தின் முன்னிலையில் இத்தல விநாயகராகிய காசிப்பிள்ளையார் கவினுறக் காட்சி அளிக்கிறார். தென்கிழக்கில் தேவர்கள் பலர் பூசித்த இலிங்கங்களும் இருக்க, தெற்குப்பக்கத்தில் ஸ்ரீ சோமாஸ்கந்தரின் தனிப் பெருங் கோயில்* மிகப் பொலிவுடன் விளங்குகிறது. இதன் அருகில் தட்சிணாமூர்த்தியும், தென்மேற்கில் அபிராமி, மகேசுவரி, கௌமாரி, நாராயணி, வராகி, இந்திராணி, காளி ஆகிய சப்த மாதர்களுடன் ஒரு விநாயகரும், மேற்கில் முருகன், மகா லட்சுமி, மற்றும் தேவர்கள் வழிபட்ட இலிங்கங்களும், வடக்கில் சண்டேசுரர், ஸ்ரீ துர்க்கை, மற்றும் சம்பந்தர், அப்பர், சுந்தரர், குந்தி, அமர்நீதியார் வடிவங்களும், ஸ்ரீ நடராசப் பெருமான் சந்நிதியும் இன்னும் வடகிழக்கில் சனி, சூரியன், சந்திரன், பைரவர் முதலிய மூர்த்திகளது வடிவங்களும் உள்ளன.

இவ்வாறு அமைந்துள்ள உட்பிரகாரத்தின் மத்தியில் 13 அடி உயரமுள்ள ஒரு கட்டுமலையில் இருபத்தைந்து படிகளை உடைய மாடக்கோயிலில் சுவாமி அம்பிகை சந்நிதிகள் உள்ளன.

## இத்தலமூர்த்திகள்

காசிப்பிள்ளையார் : இவர் இத்தல விநாயகர் ஆவார். மிக்க நுட்பமும் அழகும் நிறைந்து கருமையான கருங்கல்லில் உருவாக்கப்பெற்ற இப்பெருமானை இத்தலபுராணம் மிகப் பெருமையுடன் வாழ்த்துகிறது.

கலியாணசுந்தரர் : இப்பூவுலகின்கண் வாழும் சிற்றுயிர்கள் அனைத்தும் உய்யும்வண்ணம் இத்திருத்தலத்தில் திருவருளை

---

* *இத்தலத்தில் இந்திரனிடமிருந்து முசுகுந்தன் பெற்றுவந்த தியாகராசப்பெருமானை மூன்று தினங்கள் வைத்துப் பூசித்த படியால் ஆரூரைப்போல் இக்கோயில் அமைந்துள்ளது குறிப் பிடத்தக்கது.*

திருமேனியாகக்கொண்டு விளங்கும் ஏகநாயகரும், சுயம்பு மூர்த்தியுமாகிய மூலலிங்கமூர்த்தி ஆண்டார், கலியாண சுந்தரர், சவுந்தர நாயகர், சுந்தரநாதர், பஞ்சவர்ணேசுவரர், அமிர்தலிங்கர், திருநல்லூர் உடையநாயனுர் எனப் பலதிருப் பெயர்களுடன் அழைக்கப்பெறுகிருர்.

இம்மூலலிங்கத்தின் அருட்குறி (பாணம்), இன்ன பொருளால் உருவாக்கப்பட்டது என்றுகூற இயலாநிலையில் தானே முளைத்த கரும்பாய் (சுயம்பு வடிவாய்) தாமிர நிறத்தில் விளங்குகிறது.

இன்றும் தினம் பகல் ஒன்றில் ஆறு நாழிகைக்கு ஒரு தடவை :-

முதல் ஆறுநாழிகையில் தாமிரநிறம்; அடுத்த 6–12 நாழிகையில் இளம் சிவப்பு; அடுத்த 12-18 நாழிகையில் உருக்கிய தங்கம்; அடுத்த 18-24 நாழிகையில் நவரத்தினப் பச்சை; அடுத்த 24-30 நாழிகையில் இன்ன நிறமெனக் கூற இயலாததோற்றம்*

இவ்வாறு ஐவகை நிறத்துடன் தோன்றுவதால் பஞ்சவர்ணேசுவரர் என்றும், அமர்நீதியார் அப்பர் இவர்களை ஆட்கொண்டமையால் ஆண்டார் எனவும், அகத்தியருக்குத் தம் திருமணக்கோலத்தைக் காட்டியருளியமையால் கலியாண சுந்தரர் எனவும் (இக்கலியாணக்கோல சுதை வடிவம் இவ் விலிங்கத்தின் பின்னுல் உள்ளது), மிக்க பேரழகுடன் விளங்கு வதால் சுந்தரநாதன். சவுந்தரநாயகர் எனவும் அழைக்கப் பெறுகிருர். கல்வெட்டில் திருநல்லூர் உடையநாயனுர் எனக் குறிக்கப்பெற்றுள்ளது.

இதுவன்றி இவ்விலிங்கத்தில் மற்ருேர் காணத்தக்ககாட்சி ஒன்று உள்ளது. எங்குமுள்ள இலிங்கத்தின் ஆவுடையாரின் நடுவில் ஒரே அருட்குறி (பாணம்) மட்டும் காணப்படும். ஆனல் இங்குப் பிரதான பாணத்தின் வலப்பக்கம் சிறியதாக அகத்தியரால் பூசிக்கப்பெற்ற மற்ருேர் பாணம் இருக்கிறது. இம்மூர்த்திக்கு நல்லெண்ணெய் அபிஷேகம் செய்யப்படுவ தில்லை.

---

*இச்செய்திகளை எடுத்துரைத்தவர் இவ்வூரில் இருந்த பிர்மஸ்ரீ கலியாணசுந்தர சாஸ்திரிகள் ஆவார்.

அம்பிகை : இங்கு அருட்சத்தியாய் விளங்கும் அம்பிகை ஸ்ரீ கிரிசுந்தரி, கலியாணசுந்தரி, மலை அழகி, திருமலைச்சொக்கி என்ற பெயர்களுடன் மிகப் பெருவடிவில் பேரழகுடன் சுவாமிக்கு வடகிழக்கில் தனிக்கோயிலில் தென்முகமாக இருந்து அருள்பாலிக்கின்றார். இவ்வம்பிகையைத் தலபுராணம்,

''பரையாதி யைவகையா யருளாகி
யானந்தப் பரவை யாகி
உரைசாலும் விந்துமோ கினிமாகாளி
மற்றுமெல்லா முதிப்பச் சார்ந்து
புரைதீர்சத் தியும்வடிவும் கரணாதி
யனைத்தும்முக்கட் புனிதர்க்காக்கி
வருமாதை நல்லூர்வாழ் திருமலைச்சொக்
கியைநாளும் வழுத்தல் செய்வாம்''

என்று போற்றுகின்றது.

நடராசர் : இங்குள்ள நடராசப் பெருமானது வடிவம் மிக்க பெரிதும் அழகும் வாய்ந்தது. இவ்வடிவமே அன்றி எண்டோள் வீசிநின்று ஆடும் பிரானாக விளங்கும் சதுரத் தாண்டவமூர்த்தியின் வடிவமொன்று மிக நுட்பமும் அழகுடனும் விளங்குகிறது.

அமர்நீதிநாயனார் : பழையாறையில் அவதரித்து இத்தலத்திற்கு வந்து சைவ அறங்கள் பலபுரிந்து பெருமானால் ஆட்கொள்ளப்பெற்ற வணிகர் கோமானாகிய அமர்நீதிநாயனார் தம் மனைவி மகவுடன் காட்சி அளிக்கும் சிலாவடிவமும் செப்பு வடிவமும் இங்கு உள்ளன.

திருநாவுக்கரசர் : இருங்கூற்றகலத் திருப்பெண்ணாகடத்தில் மின்னார் மூவிலைச்சூலம் இடபம் இவற்றைப் பெருமானால் தம் தோளில் பொறிக்கப்பெற்ற நாவரசர், அவ்வச்சம் மேலுந்தீரப் பெருமானை வேண்டித் தம்தலைமீது அவரது திருவடிச்சுவடு பதிக்கப்பெற்றார். அப்பேறுபெற்ற அவரது சிலாவடிவம் இங்குப் பேரழகுடன் உள்ளது.

அஷ்டபுஜ மகாகாளி : வெளித் திருச்சுற்றின் தென்பக்கம் வடக்குமுகமாய் அம்பிகை கிரிசுந்தரியைநோக்கி வீற்றிருக்கும் இவ்வம்மை இங்கு மிகவும் வரப்பிரசாதியாய் இருந்து வேண்டுவார் வேண்டுவதை எல்லாம் அருளுகின்றார். தமிழகத்தில்

மட்டுமின்றித் தமிழ்நாட்டிற்கு வெளியில் இருக்கும் வட நாட்டில் வாழுகின்ற தமிழ்மக்களையும் இங்கு வருமாறும் காணிக்கை செலுத்துமாறும் அருள்பாலிக்கின்றாள். நாள் தோறும் மக்கள் இங்குவந்து இவ்வம்மையின் அருள்பெற்றுச் செல்கின்றனர்.

கணநாதர் : இத்தலத்தில் மேற்குக் கோபுரவாயிலின் மேற் புறம் பலிபீடவடிவில் இருக்கும் மூர்த்தி. இவரது இவ்வடிவம் இங்கும் காசியிலுமே வைத்துவழிபடப்படுகின்றது. ஆண்டுக் கொருமுறை இரவில் நடக்கும் 'கணநாதர் பூசை' என்னும் சிறப்புவழிபாடு காணற்குரியது. அன்று இவ்வூரிலும் பக்கத்து ஊரிலும் உள்ள மக்கள் தங்கள் பசு ஒருவேளை கறக்கும் பாலை அப்படியே கொடுத்துப் பூசையைச் சிறப்பிக்கின்றனர்.

இதுவரை கூறிய இத்தலத்துச் சிறப்பு மூர்த்திகளேயன்றி *மற்றும் சிவாலயத்திற்குரிய மூர்த்திகள் யாவும் சிறப்புடன்* இக்கோயிலில் உள்ளன.

## திருக்குளங்கள்

ஆலய வழிபாட்டில் மூர்த்தி, தலம், தீர்த்தம் என்னும் மூன்றும் சிறப்பிடம்பெறுவன. நம் நாட்டில் விளங்கும் பலப் பல கிணறு, குளம், ஆறு, கடற்றுறை இவையாவும் சிவமாம் தன்மைபெற்று, நீராடியோரது பிறவிப்பிணியையும் உடற் பிணியையும் போக்குகின்றன. இதனை நாவுக்கரசர் "*சென்றாடும் தீர்த்தங்கள் ஆரூர் தாமே*" *என்கின்றார்*. இவ்வகையில் இத் தலத்தில் உள்ள தீர்த்தங்கள் வருமாறு:

சப்த சாகரம் : (எழுகடல்) இப்பெருந்தீர்த்தம் திருக் கோயிலுக்கு முன்புறம் நாற்புறமும் பன்னிரண்டு படித்துறை களுடன் விளங்குகிறது. ஆதியில் பிரமாவினால் தோற்றுவிக்கப் பெற்றது ஆதலின் பிரமதீர்த்தம் என்னும் பெயருடன் இது விளங்கியது. பின்னொருசமயத்தில் ஒரு மாசி மகத்தன்று பாண்டவர்களின் தாய் குந்தி கடலில் நீராட இத்தலத்தில் பெருமானை வேண்டி நிற்க, எழு கடலையும் பெருமான் இதில் வருமாறு செய்தார். அன்று முதல் இது சப்தசாகரம் எனப் பெயர்பெற்றது.

அங்கமெலாம் குறைந்து அழுகு தொழுநோயரேயாயினும் அவர்கள் பெருமானை அகத்துள் கொண்டு இத்திருக்குளத்தின் பன்னிரு துறைகளிலும் நீராடித் திருக்கோயிலைப் பன்னிரு முறை வலம்வரும் நியதியை ஒருமண்டலம் கொள்வரேல் அந் நோய் அகலும் என்னும் நம்பிக்கை இன்றும் உள்ளது.

பிரமதேவன் இத்திருக்குளத்தின் கீழ்த்திசையில் 'இருக்கு' வேதத்தையும், தென்திசையில் 'யசுர்' வேதத்தையும், மேற்குத் திசையில் 'சாம' வேதத்தையும், வடதிசையில் 'அதர்வண' வேதத்தையும், நடுவில் 'சப்தகோடி மகா மந்திரங்'களையும் பதினெண் புராணங்களையும் வைத்துப் புனிதமாக்கினான் என இவ்வூர்த் தலபுராணம் கூறுகின்றது.

எண்ணிலாச் சிறப்புடைய இத்திருக்குளம் கும்பகோணம் மகாமகக் குளத்திற்கு இணையாக விளங்குகின்றது. "மகம் பிறந்தது நல்லூரில் மகாமகம் பிறந்தது கும்பகோணத்தில்" என்று கூறி, மாசிமக நன்னாளில் மக்கள் திரண்டு வந்து இதில் நீராடுகின்றனர்.

இத்தல நாயகராகிய கலியாணசுந்தரப் பெருமான் வைகாசி விசாகம், கார்த்திகை ஞாயிற்றுக்கிழமைகள், மார்கழித் திருவாதிரை, மாசிமகம் முதலிய நாட்களில் இதில் தீர்த்தம் அருளுகின்றார்.

அக்கினி தீர்த்தம்: இது இவ்வூரில் இக்கோயிலுக்குத் தென் கிழக்கில் அந்தணர்கள் வாழ்கின்ற அக்ரகாரத்திற்குக் கிழக்கில் உள்ளது.

நாககன்னி தீர்த்தம்: இக்குளம் இக்கோயிலுக்குத் தெற்கே ஒருகல் தூரத்தில் உள்ள மூலாழ்வான்சேரி என்ற கிராமத்தில் உள்ளது.

தரும தீர்த்தம்: இக்குளம் இக்கோயிலுக்கு மேற்கில் சிறு குட்டையாக இருக்கிறது..

தேவதீர்த்தம்: இது இந்தக்கோயிலுக்கு வடமேற்கில் 'காக்கைக்குளம்' என்னும் பெயருடன் இருக்கின்றது.

பிரமகுண்டம்: இது இந்தக் கோயிலுக்குத் தென்மேற்கில் முக்கால் கல் தூரத்தில் வாழைப்பழக்கடைக்கும் பொன்னி யம்மன் கோயிலுக்கும் இடையில் சாலைக்குத் தென்புறம் இருக்கிறது.

ஐராவத தீர்த்தம்: இந்திரனது பட்டத்து வெள்ளை யானை யாகிய ஐராவதம் பூசித்த கோயிலுக்குக் கீழ்புறம் அதாவது உத்சாணி கிராமத்திற்கு மேல்கில் புகைவண்டிப் பாதைக்கு மேல்புறம் சாலையையொட்டித் தென்பக்கம் உள்ளது. ஐராவதம் பூசித்த கோயில் ஒரு பெரும் இலிங்கத்துடன் மேற்புறம் இருக்கின்றது.

சந்திரதீர்த்தம்: இது சந்தடிக்குளம் என்னும் பெயருடன் கோயிலுக்கு வடக்கில் உள்ளது.

சூரியதீர்த்தம்: இக்குளம் இவ்வூருக்குக் கிழக்கில் உள்ள கிளியூர் கிராமத்திற்கு மேற்கில் உள்ளது.

காவிரிதீர்த்தம்: வான் பொய்ப்பினும் தான் பொய்யாக் காவிரியின் கிளைநதிகளில் ஒன்ருகிய கடுவாய் (குடமுருட்டி ஆறு) இத்தலத்திற்கு வடக்கில் ஓடுகிறது. இங்குப் பூசை மண்டபத்துடன் நீராடுதுறை ஒன்றுள்ளது. ஆடிபதினெட்டு, ஐப்பசி மாதப்பிறப்பு, ஆனிமாத அமர்நீதிநாயஞர் பூரநாள் ஆகிய தினங்களில் இக்கோயில்பெருமான் இங்குவந்து தீர்த்தம் அருளுகின்ருர்.

## தலவிருட்சம்

மிகப்பழமையான காலத்தே நம்முன்னோர்கள் கானகத்தை இருப்பிடமாகக் கொண்டு வாழ்ந்தனர். அப்போது இறைவனது வடிவத்தை மரத்தடியில் எழுந்தருளச்செய்து வழிபட்டனர். பின்னர் நாகரிக வளர்ச்சியில் காடுகெடுத்து நாடாக்கப்பட்டு, தெய்வங்களுக்கு மிகப்பெரிய கோயில்கள் அமைக்கப்பெறினும் ஆதியில் இருந்த மரத்தினை அழிக்காது அதனை இன்றும் கோயிலில் தலவிருட்சம் என்ற பெயரில் வளர்த்து வருகின்றனர். அவ்வகையில் இத்தலத்தின் ஆதிமரம் (தலவிருட்சம்) வில்வமரமாகும்.

## சுற்றுக்கோயில்கள்

இப்பெருங்கோயிலின் நான்கு திருவீதிகளில் தென்கிழக்கு வடமேற்கு ஆகிய இருதிசைகளிலும் பிள்ளையார்கோயில்களும், மேலவீதியில் ஒரு பெருமாள் கோயிலும், அடுத்து வேதியர்கள் வாழ்கின்ற அகரத்தின் மேற்றிசையில் ஒருபெருமாள் கோயிலும், கீழ்த்திசையில் ஒருபிள்ளையார் கோயிலும், மற்றும் இப்பெருங்கோயிலுக்குத் தென்மேற்கு மூலையில் ஒரு மாரியம்மன் கோயிலும் இருக்கிறது.

திருக்கோயிலின்முன் உள்ள படித்துறையை ஒட்டித் தென்பக்கம், முன்னர் அமர்நீதிநாயனார் கட்டிய திருமடம்* இருந்த இடத்தில் ஒருபிள்ளையார் கோயிலும், கீழவீதியில் தேர்நிலை மண்டபத்தடியில் ஒருபிள்ளையார்கோயிலும் இருக்கிறது.

## தலவரலாறு

இப்புனிதத் தலத்தின் புராணம் மிகச் சிறப்புடையதாகும். இதன் பெருமைகளைச் சிவபிரானே முருகனுக்கும், முருகன் நந்திதேவருக்கும். நந்திதேவர் சனற்குமாரருக்கும். சனற்குமாரர் வியாசருக்கும், வியாசர் மற்றைய முனிவர்களுக்கும் எடுத்துரைத்தார் என இப்புராணம் கூறுகின்றது.

இவ்விவரங்கள் வடமொழிப் புராணங்களாகிய பிர்மாண்டம், காருடம். பவுடிகோத்திரம், சிவரகசியம், உபமந்யு பக்த விலாசம் ஆகியவற்றில் எடுத்துரைக்கப்படுகின்றன; இவற்றிலிருந்து பல பகுதிகளை எடுத்துத் தொகுத்து "சுந்தரகிரி மகாத்மியம்" என்றொரு வடமொழிப் புராணத்தைப் பைங்காநாடு கணபதி சாஸ்திரிகள் என்ற வடமொழிப்புலவர் செய்துள்ளார்.

இந்நூல், அடியில்கண்டவாறு 28 சருக்கங்களையும் 1424 சுலோகங்களையும் உடையது. முதல் 7 சருக்கங்கள் பவுடிகோத்திரத்திலிருந்தும், அடுத்த 10 சருக்கங்கள் காருடத்தில்

---

*இம்மடம் பழுது அடையத் தொடங்கியதும் அங்கிருந்த அமர்நீதி நாயனார் சிலாவடிவம் கோயிலுக்குள் கொண்டுவந்து வைக்கப்பட்டது. பின்னர் மேலும் சிதலமடையவே 1944-இல் தகர்க்கப்பட்டுவிட்டது.

இருந்தும், அடுத்த 7 சருக்கங்கள் பிர்மாண்டத்திலிருந்தும், அடுத்த 3 சருக்கங்கள் சிவரகசியத்திலிருந்தும், அடுத்த ஒரு சருக்கம் உபமந்யு பக்த விலாசத்திலிருந்தும் எடுத்தாளப் பட்டுள்ளது.

இந்த "சுந்தரகிரி மகாத்மியம்" என்னும் வடமொழிப் புராணம் 1906-ல் இவ்வூரிலிருந்து மறைந்த பிரமஸ்ரீ கலியாண சுந்தர சாஸ்திரி அவர்களால் பதிப்பிக்கப் பெற்றுள்ளது.

இவ்வடமொழிப் புராணங்களேயன்றித் தமிழில் சிவப் பிரகாச அடிகளாரின் இளவலும் சீகாளத்திப் புராண ஒரு பகுதியின் ஆசிரியருமான வேலையசுவாமிகள் இத்தலத்திற்கு ஒரு புராணம் இயற்றியதாகக் கூறப்படுகிறது.

மேலும் 17-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த இலக்கண விளக்கம் என்னும் நூலின் ஆசிரியராகிய வைத்தியநாததேசிகர் என்னும் நாவலர் இத்தலபுராணத்தை 26 சருக்கங்களாக 1013 பாக்களில் இயற்றியுள்ளார்.

இந்நூல் மிகச்சொல்லழகும் சைவசித்தாந்தக் கருத்துக் களும் கொண்டது. சிற்சில இடங்களில் கம்பராமாயணப் பாக்களின் சாயலையும்கொண்டது. இந்நூலும் இவ்வூரில் இருந்த பிரமஸ்ரீ கலியாணசுந்தர சாஸ்திரிகளால் 1908-ல் அச்சிடப்பட்டுள்ளது.*

இந்நூலின் உரைநடையாக்கம் இக்கோயிலைப் பரிபா லித்து வரும் திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனத்து 22-ஆவது குருமகா சந்நிதானம் அவர்கள் அரு ளாட்சிக் காலத்தில் வெளியிடப்பட்டுள்ளது. இந்நூலின்கண் கூறப்படும் வரலாறுகளை இதனடியில் சுருக்கமாகக் காணலாம்.

## சுந்தராசலம் வந்த வரலாறு

ஒரு சமயம் வாயுதேவனுக்கும் ஆதிசேடனுக்கும் பலப் பரீட்சை நடந்தது. அதன்படி வாயு தன் பெருவேகத்தால் மேருமலையின் சிகரத்தைப் பெயர்க்கவேண்டும்; ஆதிசேடன்

* இப்போது தஞ்சாவூர் அரண்மனை சரஸ்வதி மஹால் நூல் நிலையத்தில் அச்சிடப்பெற்றுள்ளது.

அதனைப் பெயர்க்கமுடியாதபடி தடுக்கவேண்டும். அப்படியே வாயு பெருவேகத்தைக் காட்ட, ஆதிசேடன் படமெடுத்துத் தடுக்க, வாயுவின் செயல் கைகூடாது காற்றின் வேகத்தால் அனைவரும் தவிக்க நேர்ந்தது.

அதனால் தேவர்கள் அனைவரும் ஆதிசேடனை அவனது படத்தைச் சுருக்கச்சொல்ல, தேங்கிநின்ற பெருங்காற்றின் வேகத்தால் மேருவின் இரு கொடுமுடிகள் பெயர்ந்தன. இவற்றுள் சுந்தரகிரியாகிய முடி இத்திருநல்லூரிலும், மணி கூட கிரியாகிய முடி தென்கிழக்கில் உள்ள ஆவூரிலும் விழுந்தன. இங்கு விழுந்த சுந்தரகிரியின் உச்சியில் ஒரு வில்வ மரத்தடியில் பெருமான் சுயம்பு வடிவாய்த் தோன்றி அனைவருக்கும் அருள்புரிந்தார்.

## பிரமதேவன் பூசித்தது

முன்னர், பிரமதேவன் தனது தந்தை திருமாலுடன் நடந்த போட்டியில் சிவபிரானது முடியைக் கண்டேன் என்று பொய்யுரைத்த தீவினையைப் போக்கிக்கொள்ள இச் சுந்தரகிரிக்கு முன்னால் தன் பெயரால் பொய்கை ஒன்றை நிறுவி நீராடி, பெருமானைப் பூசித்துப் பேறுபெற்றான். இப் பிரமதீர்த்தம் பின்னர் சப்தசாகரம் (எழுகடல்) எனப் பெயர் பெற்றது.

## அகத்தியருக்குத் திருமணக்கோலம் காட்டியது

முன்னொருசமயத்தில் மலையரையன் மடப்பாவையை (உமாதேவியை) சிவபிரான் திருமணம் புரிந்துகொள்ளும் காட்சியைக் காண அனைத்துச் சீவகோடிகளும் திரண்டு அங்கு சென்றனர். அதனால் உலகின் வடதிசை பெரும் பாரத்தால் தாழவே தென்திசை உயர்ந்தது. இதனைத் தென்திசைக்குச் சென்று நின்று சமப்படுத்துமாறு பெருமான் தமிழ்முனிவருக்கு (அகத்தியருக்கு) கட்டளையிட அதற்கு அவர் திருமணக் காட்சியைக் காணும் வாய்ப்பு தமக்கு வாய்க்கப்பெறாமல் போவதைக்கூறி இரந்தார். பெருமான் பின்னர் இக்காட்சியை இவ்வாறே காட்டுவதாகக் கூறிப் பின் அக்காட்சியை இத் தலத்தில் காட்டியருளினார்.

அதனைக்கண்டு மகிழ்ந்த அகத்தியர் இங்கு சுந்தரலிங்கத்தின் வலப்பக்கம் பிறிதொரு அருட்குறியை (பாணத்தை) வைத்துப் பூசித்துப் பேறுபெற்றார். அன்று அவர்கண்ட திருமணக் கோலத்தைக் காட்டும் சிற்பத்தை, மூலலிங்கத்தின்பின் கருவறையில் இன்றும் காணலாம்.

## தேவர்கள் திருவைந்தெழுத்தின் பெருமையை உணர்ந்தது

ஒருசமயம் தேவர்கள் அனைவரும் பிரமனை அடைந்து எல்லையில்லா இன்பத்தையும் மாறிலா மகிழ்ச்சியையும் அடைய வழி ஒன்று உரைக்கவேண்டினர். அதற்கு வாணி கேள்வனாகிய பிரமன் திருவைந்தெழுத்தினை உபதேசிக்கப் பெறுவதேயாகும் என்று அதன் சிறப்பினைக் கூறலானார்.

'இதன்சிறப்பு அளவிடற்கரியது. இது மந்திரங்கள் யாவற்றிலும் மேலானது. வேதம் நான்கினும் மெய்ப்பொருளாய்த் திகழ்வது. பிறவிப்பிணியை நீக்கவல்லது. அழிவிலா வீடுபேற்றை அளிக்கவல்லது. அன்பில்லாத மூர்க்கரேயாயினும் இன்புடன் மனத்தில் நினைத்தாராயின் அரனடிக்கு ஆளாக்கும் தன்மையது.

கல்லுடன் சேர்த்துக்கட்டி, கடலிலிட்டாலும் நற்றுணையாய்நின்று கரைசேர்க்கவல்லது. இதனால் தொல்லைகளும் நோய்களும் நீங்கும். அன்புளார் மிகப்பெருகி நினைவாராயின் அவரை வானவராக்கும். கொல்ல நமன்தூதர் வரினும் நினைவார்க்கு அல்லல்கெடுப்பது. ஒண்சுடர் ஞானவிளக்கினை ஏற்றி அன்புத்தேனை வழிதிறந்து ஏத்தவல்லார் சிவமாம்பேறு பெறுவர். இன்னும் வினையின் நீங்கி விளங்கிய அறிவுடையார் ஆவர். ஆதலின் துஞ்சலும் துஞ்சல் இல்லாதபோதினும் நெஞ்சகம் நைந்து நினைக்கற்பாலது. இதனை நாம் மறக்கினும் நமது நா சொல்லற்பாலது.

சூக்குமம், காரணம், மகாகாரணம் எனப் பக்குவநிலைக்கு ஏற்ப ஞானாசிரியனால் உபதேசிக்கப்படுவது. நானும் எனது தந்தையுமே இதனை ஆய்ந்திலம். ஆதலின் உமைபங்கனாகிய சிவபிரானை வழிபட்டு அறிதல் நன்று. நான் முன்னர் வழிபட்டு உயர்ந்த சுந்தரகிரியாகிய திருநல்லூரை நீங்கள் அடைந்து பேறு பெறுங்கள்' என்றுரைத்தார்.

அவ்வாறே தேவர்கள் இச்சுந்தராசலமாகிய திருநல்லூருக்குவந்து தங்கள் பெயரால் ஒரு குளத்தை நிறுவி நீராடிச் சிவபெருமானைப் பூசித்து, திருவைந்தெழுத்தினை உபதேசிக்கப் பெற்றனர்.

## அக்கினி தீர்த்தச் சிறப்பு

மதுரை சோமசுந்தரக்கடவுளை மருமகனாய் அடையும் பேறுபெற்ற மலையத்துவச பாண்டியன் காலத்தில் வாழ்ந்த அந்தணச் சிறுவன் ஒருவன், தன் குருவின் பசுவை ஒருசமயம் உணவின்றிப் பட்டினிபோட, அதனால் பசுவுக்குரியவன் மறுபிறவியில் நாயாய்ப்பிறந்து அலைந்து ஒருதினம் இத்தலத்திற்கு வந்தான். அன்று சிவராத்திரி நன்னாள். ஒரு அந்தணச் சிறுவன் இப்பதியில் உள்ள அக்கினி தீர்த்தத்தில் நீராடித் தன்முடியில் இருந்த நீரைத்தட்ட அத்துளிகள் அந்நாயின்மேல் தெரித்தது. அவ்வளவில் அந்நாயுருவம் நீங்கியது. முன்னுருவம் பெற்ற அவ்வந்தணன்பின் சுந்தரநாதப்பெருமானைத் தரிசித்து நற்பேறு பெற்றான்.

## சுமதி காந்தனை மணந்தது

பாம்புகளுக்கு அரசனாகிய ஆதிசேடனது மகள் சுமதி, தனக்கினிய கணவனை வேண்டித் தினம் ஒருபிலத்தின்வழி இந்நல்லூருக்கு வந்து ஒரு தீர்த்தத்தில்[1] நீராடிப் பெருமானை வழிபட்டு, தன் நாகர் உலகம் சென்றுவந்தாள். இவ்வாறான நாட்களின் சோணாட்டை ஆண்டுவந்த ஒரு அரசிளங்குமரன் அரித்துவசன்[2] என்பவன் ஒருநாள் இங்குவந்து கலியாண சுந்தரப் பெருமானைத் தரிசித்தசமயம் அங்குவந்த சுமதியைக் கண்டு விரும்ப, பின் பெருமான் அருளால் இருவரும் மணஞ் செய்துகொண்டு பெருமானைப் பலநாளும் தரிசித்துப் பேறு பெற்றனர்.

---

1 இது இவ்வூருக்குத் தெற்கில் உள்ள மூலாழ்வான்சேரி என்னும் சிற்றூரில் உள்ளது.

2 திருவலஞ்சுழி தலவரலாற்றில் இம்மன்னன் காவிரியின் கிளையாகிய அரிசிலாற்றைக் கொணர்ந்தான் எனப்படுகிறது.

## திருமால் நரசிங்கவடிவம் பெற்றது

கொடிய அரக்கனாகிய இரணியனைக் கொல்ல நரசிங்க வடிவம் வேண்டி இத்தலத்தில் திருமால் தவங்கிடந்தார். இத்தல நாயகராகிய சுந்தரநாதப்பெருமான் தோன்றி அவ் வடிவத்தை அளித்து, இரணியன் மாய்ந்தபின் தன் கருவறை விமானத்து உச்சியில் மேற்குமுகமாய் அவ்வடிவுடன் இருக்கப் பணித்தார். அவ்வடிவத்தை இன்றும் இவ்விமானத்தில் காணலாம்.

## எழுகடல் வந்த வரலாறு

ஒருசமயம் பாண்டவர்களின் அன்னை குந்திதேவி இத் தலத்தை வந்தடைந்தபோது நாரதமுனிவரைச் சந்தித்தாள். அன்று மாசிமக நன்னாள். கடல் நீராடுவது சிறந்த புண்ணியம் என அவர் கூறக் கேட்டுப் பெருமானிடம் வேண்டினாள். அவளது விருப்பம்நிறைவேற முன் மதுரையில் மலையத்துவச பாண்டியனின் தேவி காஞ்சனமாலைக்காகப் பெருமான் எழு கடலையும் பொற்றாமரைக் குளத்தில் வருமாறு செய்ததுபோல் இங்கு குந்திக்காகப் பிரமதீர்த்தத்தில் உப்பு, கரும்பு, கள், நெய், தயிர், பால், நீர் ஆகிய எழு கடல்*களையும் வருமாறு செய்யக் குந்தி நீராடிப் பேறுபெற்றாள். இக்குந்தியின் சிலா வடிவம் ஒன்று பெருமானைப் பூசிக்கும் கோலத்தில் இக் கோயிலுள் இருக்கிறது.

## ஐராவதம் பூசித்தது

ஒருசமயம் இந்திரனால் சாபம் பெற்ற அவனது வெள்ளை யானையாகிய ஐராவதம், இத்தலத்திற்குவந்து தென்மேற்குத் திசையில் ஒரு குளத்தையும் இலிங்கத்தையும் வைத்து வழி பட்டுச் சாபம் நீங்கப்பெற்றது. அக்கோயில் இப்போது இவ்வூருக்கு மேற்றிசையில் உள்ள உத்தாணி என்ற கிராமத் தின் மேற்கில் உள்ளது.

---

* *இவ்வேழு கடல்களைக் குறிக்கும் எழு கிணறுகள் இக்குளத் துள் உள்ளதாகச் சொல்லப்படுகிறது.*

